# இயலிசை

தனிப்பிரதி விலை 0-50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10
அரையாண்டு சந்தா ரூ. 5

சிறப்பாசிரியா :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோ

''இயலிசை''
57, தெற்கு சிவன் கோயில்தெரு,
கோடம்பாக்கம் சென்னை-24.

மலர் 3 15-1-85 இசைக்கலை தமிழ் மாதமிருமுறை இதழ் 17-18


## சீர்காழியாருக்கு 'பண்ணிசை அரசு' விருது !

### திருவையாறு தமிழிசை மன்றம் வழங்கியது :

திருவையாறு தமிழிசை மன்ற 14-ம் ஆண்டு தமிழிசை விழா ஜனவரி 14, 15, 16 தேதிகளில் திருவையாறு அரசர் கல்லூரி மைதானத்தில் நடைபெறுகின்றது. பல தமிழிசைவாணர்கள் நாதசுர, தவில் கலைஞர்கள் கலந்து கொள்கின்றனர். முதல் நாள் இரவு குன்னக்குடி வைத்யநாதன் தனி வயலின் கச்சேரியுடன் நிகழ்ச்சிகள் முடிவடையும் அப்பொழுது அவர் மன்றத்தாரால் பாராட்டப் பெறுவார்.

இரண்டாவது நாள் இரவு நிகழ்ச்சிகளில் மன்ற இசைத்துறை செயலாளர்கள் சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம், குடந்தை தேவி பிரசாத் (தனிவயலின்) கச்சேரிகள் உள்ளன. இறுதிநாள் நிகழ்ச்சிகளில் வீணை R. பிச்சுமணி, டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன், டாக்டர் சீர்காழி S. சிவ சிதம்பரம் ஆகியோர் நிகழ்ச்சிகள் நடைபெறும். அப்போது சீர்காழி S. கோவிந்தராசன் அவர்களுக்கு மன்றத்தாரால் 'பண்ணிசை அரசு' விருது வழங்கப்படும்.

தவிர விழாவில் கீழ்க்கண்ட கலைஞர்களுக்கும் விருதுகள் வழங்கப்படுகின்றன,

R. பிச்சுமணி - வீணை இசை வித்தகர்
இஞ்சிக்குடி E. P. கந்தசாமி
E. P. நடேசன் - பெருவங்கியக்கலையரசு
திருவையாறு அரசர் கல்லூரி தவில் பேராசிரியர்
திருவிடைமருதூர் கணேசன் - இசைமாமுரசு
குடந்தை தேவி பிரசாத் - வில்லிசை வேந்தர்
'' பத்மநாபன் - மத்தளமணி
,, கண்ணன் - ,,
,, சரவணன் - மத்தள இளவரசு



கலைஞர்கள், ரசிகர்கள் 'இயலிசை' அன்பர்கள், ஆதரவாளர்கள், விளம்பரதாரர்கள், அனைவர்க்கும் பொங்கல் வாழ்த்துக்கள் !

'இசைச்செல்வன்'
சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம்
சிறப்பு ஆசிரியர்

## பைபிள் நடன நாடக அரங்கேற்றம்

சென்னை அடையாறில் உள்ள பரத கலாஞ்சலி நடனக் கழகம் 'மாதவகீதம்' என்ற கிருத்துவ நடன நாடகத்தைத் தயாரித்து சென்னை அருங்காட்சியக அரங்கில் 30-12-84 அன்று அரங்கேற்றம் செய்தனர். கழகத்தின் இயக்குநர் V. P. தனஞ்செயன் நாடகத்தில் பங்கேற்ற நடனக் கலைஞர்களுக்கு நல்ல பயிற்சி அளித்திருந்தார். நீதிபதி நயினார் சுந்தரம் எழுதிய இந்நாடகப் பாடல்களுக்கு D. பட்டம்மாள் ஸ்ரீ இசையமைத்து இருந்தார். நாடகம் கலைப்பிரியர்களுக்கும், கிருத்துவ அன்பர்களுக்கும் விருந்தாக இருந்தது !

நடனக்கலைஞர்

## ஜெயலட்சுமிக்கு 'கலைமாமணி' விருது

### தமிழக அரசின் 1985 வருட 'கலைமாமணி' விருதுகள் !

பல்வேறு கல்வித்துறைகளில் சிறந்து விளங்கும் கலைஞர்களுக்கு ஆண்டுதோறும் 'கலைமாமணி' பட்டத்தை தமிழக அரசின் ஆதரவுடன் செயல்படும் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் வழங்கி வருகின்றது. இந்த ஆண்டு 31 பேர்களுக்கு 'கலைமாமணி' பட்டம் வழங்கப்படுகின்றது.

இவர்களில் இசை, நாட்டிய துறைகளில் பட்டம் பெற்றவர்கள்
நாதசுரம் : திருக்காவூர் T.G. சுப்ரமணியம்
தவில் : V.G. பாலசுப்ரமணியம்
இசைக்கலைஞர் : மதுரை T.N. சேஷகோபாலன்
வயலின் . பரூர் M.S. அனந்தராமன்
மிருதங்கம் : குத்தாலம் R. விஸ்வநாதய்யர்
கோட்டுவாத்தியம் : ந.ரவிகிரன்
இறையருள் பாடற்கலைஞர் : சோ.முத்துசாமி தேசிகர்
பரதநாட்டியக் கலைஞர் . கே.ஜெயலெட்சுமி
நடன ஆசிரியர் : K.N.தட்சணாமூர்த்தி
நாட்டிய நாடகக்கலைஞர் : நடனமணி பாலு
பரதநாட்டிய மிருதங்கக் கலைஞர் : T.S.நாகப்பன்
இசைப்பாடல் ஆசிரியர் ; ஆ.க.முத்துக் குமாரசாமி
இசை ஆராய்ச்சி : R.V.கிருஷ்ணன்
இசை நாடக நடிகர் : கொத்தமங்கலம் சீனு
,, நடிகை : T.R.கோமளலட்சுமி
பழம்பெரும் இசை நாடகநடிகர் :T.A.சண்முக சுந்தரப்புலவர்
கரக ஆட்டக் கலைஞர் ; S.R.கல்யாணி

சிறந்த கலை நிறுவனமாக 'நெல்லை சங்கீத சபா' தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. ஏற்கெனவே கலைமாமணி பட்டம் பெற்று வறுமையில் உள்ள 14 கலைஞர்களுக்கு ரூ 1000/— பணமுடிப்பு வழங்கப்படும்.

இந்தப்பட்டம் வழங்கும் விழா வருகிற 26ந்தேதி காலை குடியரசு தினத்தன்று சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெறுகின்றது. தமிழக ஆளுநர் குரானா விழாவிற்கு தலைமை தாங்கி 'கலைமாமணி' பட்டம் பெற்றவாகளுக்கு பொற்பதக்கம் வழங்குவார். விழாவின் போது மறைந்த 13 கலைமேதைகள் படம் திறந்து வைக்கப்படும். தமிழிசைக்காவலர் மறைந்த ராஜா முத்தையா செட்டியார் படமும் திறந்து வைக்கப்படும். இப்படங்களை நிதி அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் திறந்து வைத்து விருது பெறும் கலைஞர்களுக்கு பட்டம் வழங்குவார். 14 கலைஞர்களுக்கு பொற்கிழியை அமைச்சர் ஆர்.எம்.வீரப்பன் வழங்குவார். சிறந்த கலை நிறுவனத்துக்கு அமைச்சர் அரங்கநாயகம் கேடயம் வழங்குவார்.



செல்வி. S. ஜெயந்தி

தஞ்சாவூர் மாணவிகளின்

## சலங்கை பூஜை அரங்கேற்று விழா

மறைந்த நாட்டிய மேதை பொன்னையா பிள்ளை அவர்கள் பெயரில் தஞ்சையில் நாட்டியக் கல்லூரி நடைபெற்று வருகின்றது. அதன் ஆசிரியர் J. நடராஜன் மாணவியான செல்வி S. ஜெயந்திக்கு 10-12-84 அன்று கல்லூரி கூடத்தில் சலங்கை பூஜை அரங்கேற்றுவிழா நடைபெற்றது. இவர் தஞ்சாவூர்கா. ஸ்ரீதரின் மகளாவார் இக்கல்லூரியின் மாணவியும் தஞ்சை P. A. இருதயசாமி நாடார் அவர்களின் பேத்தியுமான செல்வி A. எட்வினாவுக்கு கல்லூரியில் 2-1-85 அன்று சலங்கை பூஜை அரங்கேற்று விழா நடைபெற்றது.

இரு மாணவிகளும் சிறப்பாக நடனமாடி கல்லூரிக்கும், ஆசிரியருக்கும் நற்பெயர் சேர்த்தனர். மாணவிகளுக்கு இயலிசை வாழ்த்துகள் !

கலைத் தொடர்கதை

# ஆடலரசி அபிராமி

## 18. நாயனக்காரர் வந்தார்

தஞ்சை மாவட்டம் முழுவதும் நாதசுரக் கலைஞர்கள் வாழ்ந்தாலும் 'நாயனக்காரர் வந்தார்' என்று யாரேனும் குறிப்பிட்டால் அது சிக்கல் சண்முக சுந்தரம் பிள்ளையே குறிக்கும். மற்றவர்கள் மேளம் என்றால் குறைந்தது, செம்பொன்னார் கோவில். திருவிழிமிழலை, கீரனூர், சிதம்பரம் என ஊர் பெயரையாவது சொல்வார்கள். யார் மேளம் என்று கேட்டால் 'நம்ம நாயனக்காரர்தான்' என்று பதில் வந்தால் சிக்கலார் மேளம் தான் என்று புரிந்து கொள்வார்கள்.

நாதசுரத்தில் புல்லாங்குழல் ஓசை போல் வருவது மிகவும் கடினம். இது எவருக்கோ அமையும். நல்ல சுரஞானம் படைத்த சிக்கலாருக்கு இந்த குழல் நாதமும் கிடைக்கப் பெற்றதால் அவரது வாசிப்பில் மக்களுக்கு ஓர் கவர்ச்சி - போதை கிடைத்தது. பேரும் புகழும் பெற்று அக்கால கலைஞர்களுக்கெல்லாம் முதல்வராக அரசராக விளங்கினார். இவரது கம்பீரமான தோற்றமும் அனைவரையும் கவருவதாக இருந்தது. மேளத்தில் இருக்கும் கலகலப்பு பேச்சிலும் இருந்தது. வேடிக்கையாகவும், வினயமாகவும் பேசுவதில் வல்லவர்.

இவர் நாதசுரத்தில் தோடிராகம் வாசித்தால் மிகவும் இனிமையாக இருக்கும். இதனால் ரசிகர்கள் இவரது கச்சேரிகளில் தோடி ராகம் வாசிக்கக் கேட்பார்கள். திருவாரூரில் ஒருமுறை செட்டியார் ஒருவர் வீட்டு கல்யாணத்திற்கு சென்று பிள்ளையவர்கள் வாசித்துக் கொண்டிருந்தார். தோடியும் வாசித்தார். தோடி முடிந்து தவில் தனி விட்டார். அப்பொழுது செட்டியார் அவசரமாக வந்து 'பிள்ளைவாள் தோடி வாசிக்கணும்' என்று கேட்டார்! பாவம் அவருக்கு அவ்வளவு இசைஞானம்.

கூட்டத்தில் சிலர் சிரிக்க ஆரம்பித்தனர். செட்டியாருக்கு ஒன்றும் புரியவில்லை. உடனே சிக்கலார் சமாளித்துக் கொண்டு, ''செட்டியாரய்யா மன்னிக்கணும்.......தோடி வாசிக்கும் நாதசுரத்தை இன்றைக்கு மறந்து வீட்டில் வைத்து விட்டு வந்து விட்டேன். அடுத்த விழாவில் அவசியம் கொண்டு வருகின்றேன்'' என்று சொன்னார். கூட்டத்தினர் சிரிப்பை அடக்கிக் கொண்டு சிக்கலார் அறிவுத்திறனைப் பாராட்டினர்.

பொதுவாக இவரது கச்சேரிக்கு ஏகப்பட்ட கூட்டம் வரும். குறித்த நேரத்தில் வந்து சேரமாட்டார், இவரைக் கண்டதும் தான் மக்களுக்கு வந்து விட்டார் என்ற நம்பிக்கை வரும். உடனே அந்த ஊரிலேயே பெரும் சலசலப்பு ஏற்படும். வாசிக்க ஆரம்பித்து விட்டால் பண்டிதர், பாமரர் - ஏன் மாடுகள் கூட ஓரத்தில் நின்று கேட்கும். இவர் வாசித்த புன்னகவராளிக்கு பல இடங்களில் பாம்புகள் கூட்டத்திற்கும் அஞ்சாது வந்து நடனமாடி உள்ளன. இவரும் அதற்கு கொஞ்சம் கூட அஞ்சமாட்டார். சட்டென்று வராளி ராகத்தை வாசித்து அவைகளை வந்த வழியே அனுப்பி வைப்பார். இவர் கூடவே எப்பொழுதும் ஒரு கூட்டம் இருக்கும். அதில் இவரது இசைக்குழு தவிர வசதி படைத்த ரசிகர்களும் உண்டு. வேலை ஏதும் இல்லாமல் சுற்றி வருபவரும் உண்டு.

தஞ்சாவூர் திருமணத்தில் முதல்நாள் மாப்பிள்ளை அழைப்பிற்கு சிக்கலார் வரவில்லையென்று தகவல் கிடைத்ததும் தஞ்சாவூர் சுந்தரம் பிள்ளையை திருமண வீட்டார் ஏற்பாடு செய்து அழைப்பினை நடத்தினர். ஊரின் ராசவீதிகளில் ஒன்றில் அமைந்திருக்கும் அம்மன் கோவிலிருந்து மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் துவங்கியது. அடுத்த இராச வீதியிலேயே திருமண மண்டபம் இருந்தது. என்றாலும் பெரிய இடத்து திருமணம் ஆதலால் நான்கு இராசவீதிகளும் ஊர் வலம் சுற்றி வந்தது. குதிரைகள் பூட்டிய அக்கால சாரட் வண்டியில் மாப்பிள்ளையை அமாத்தி அழைத்து வந்தனர்.

சுந்தரம் பிள்ளை தனது உள்ளூர் குழுவினருடன் ஊர்வலம் முன்னே நாதசுரம் வாசித்து வந்தார். இரண்டு வீதிகள் கூடும் இடங்கள் நின்று கனராகங்களில் பெரிய கீர்த்தனைகளை வாசிப்பது வழக்கம். எனினும் சுந்தரம் பிள்ளை வேறு மேளத்திற்கு பதில் வந்த மேளம்தான் நாம் என கூடியவரை அடக்கமாக வாசித்து திருமண மண்டபத்திற்கு நெருங்கிக் கொண்டிருந்தார்.

அந்தநேரத்தில் மாப்பிள்ளை சாரட் வண்டி பின்னே இன்னொரு குதிரை வண்டி வந்து நின்றது. அதிலிருந்து சிக்கல் சண்முக சுந்தரம் பிள்ளை இறங்கினார். பட்டு வேஷ்டி, மேலே பட்டுசட்டை துண்டு. கழுத்தில் தாம்பு கயிறு அளவு தங்கச்சங்கிலி. அதில் பெரிய பதக்கம். காதில் வைரக்கடுக்கண். நெற்றி நிறைய விபூதி. அதன் மேல் சந்தன சவ்வாது — குங்குமபொட்டு. அந்த பொட்டுடன் போட்டி போடுவது போல் நாயனக்காரர் கண்களும் சிவந்திருந்தன! அவருடன் வண்டியிலிருந்து 5,6 பேர் இறங்கினர். உதவியாளர் ஒருவர் கையில் நாதசுரத்தை வைத்திருந்தார்.

அப்பொழுது சுந்தரம் பிள்ளை இராகமாலிகை வாசித்து அதில் ப்யாகடை ராகம் வாசித்துக் கொண்டிருந்தார். நாயனக்காரரைப் பார்த்ததும் சுந்தரம் பிள்ளை வணக்கம் தெரிவித்து விட்டு வாசிப்பை முடிக்க முயன்றார். சிக்கலாரோ அவர் அருகில் வந்து 'ஊம்...... நடக்கட்டும்' என்று சொல்லி அவரது குழுவினருடன் சேர்ந்து நின்றார்.

இதற்குள் சிக்கலாரைப் பார்த்த ஜனங்கள் 'நாயனக்காரர் வந்து விட்டார்' என்று சொல்லிக் கொண்டு கூட ஆரம்பித்து விட்டனர். அப்பகுதியிலேயே ஒரு பரபரப்பு ஏற்பட்டு விட்டது. சுந்தரம் பிள்ளையும் இனிமேல் நாம் வாசிப்பது சிக்கலாருக்கு இடையூருக் இருக்கும் என, ''பிள்ளைவாள்........ நான் நீண்ட நேரமா வாசிக்கிறேன். உங்களுக்காக ஜனங்கள் வெகு நேரமா காத்து இருக்காங்க'' என்று சொன்னார். அவர் நேரங்கழித்து வந்ததனையும் சுட்டிக் காட்டுவதாக அவ்வார்த்தைகள் இருந்தன. சிக்கலார் மிகவும்பணிவுடன் சிரித்துக் கொண்டு 'மன்னிக்கணும்' என்று சொல்லிவிட்டு தனது நாதசுரத்தை வாங்கினார். அதில் சீவாளியை தனியே எடுத்து பீ.பீ என்று இருமுறை ஊதிப்பார்த்தார். அந்த சத்தம் கிளி கத்துவது போல் இருந்தது. பின்னர் நாதசுரத்தில் சீவாளியைப் பொருத்தி சுந்தரம் பிள்ளை வாசித்த அதே ப்யாகடை ராகத்தை ஆரம்பித்தார்.

சிறிது நேரம் இராக ஆலாபனை வாசித்தார். நீண்டநேரமாக வாசித்து சுந்தரம் பிள்ளை என்ன சூழ்நிலையை Tempo அப்பொழுது உருவாக்கியிருந்தாரோ அந்த விருவிருப்பில் அந்த ஆலாபனை அமைந்திருந்தது. இவரது நாதம் கேட்டதும் மேலும் கூட்டம் கூட ஆரம்பித்தது. ஆனல் அவருக்கோ கூட்டம் போதவில்லை என்ற எண்ணம். அந்த எண்ணத்தை அவரது முதல் பாட்டு-கீர்த்தனம் வெளிப்படுத்தியது. வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் பாடிய 'வருவார் அழைத்து வாடி' என்ற கீர்த்தனைதான் அது. ப்யாகடையில் மிஸ்ர சாப்பு (ஏழெண்நடை) தாளத்தில் அமைத்து வாசித்தார். இரண்டு இடம் தள்ளி பாட்டு எடுப்பு அமைத்து அங்கேயே சுரம் வாசித்தார்.

சுரம் வாசிக்கும் பொழுது ஒரு பொடி வேலையும் செய்தார். ப்யாகடைராகம் வாசிப்பவர்கள் மேல் நிலையில் மத்திம சுரம் 'ம' வரை பிடித்து வாசிப்பார்கள், பஞ்சமம் 'ப' சுரம் இருந்தாலும் பெரும்பாலும் வாசிப்பது கிடையாது. காரணம் வக்ர ராகமான ப்யாகடையில் அந்த சுரத்தை சரியாகப் பிடிக்கவில்லையென்றால் ராக சாயலே - லட்சணமே மாறி விடும். சுந்தரம் பிள்ளையும் ஏனோ மத்திமம் வரை வாசித்து விட்டிருந்தார். இதை கவனித்திருந்த சிக்கலாரோ மிக லாவகமாக மேல் பஞ்சமத்தை இரு முறைப் பிடித்து ப்யாகடை ராக அழகோ சாயலோ கெடாது வாசித்து காட்டினார், இந்த நுட்பமான விஷயத்தை புரிந்த சுந்தரம் பிள்ளை 'சபாஷ்..... பிள்ளை' என்று வாய் விட்டு கூறி தனது மகன் சுவாமிநாதனைப் பார்த்தார். அந்தப் பாரவையில் 'புரிகின்றதா' என்ற கேள்வி இருந்தது. அவனது வாயோ நாயனக்காரர் வாசித்த அந்த மேல் பஞ்சம ஆலோபனையை (பிரயோகத்தை) முணுமுணுத்துக் கொண்டு இருந்தது.

(தொடரும்)

சென்னையில்

## திருப்புகழ் இசை விழா !



சென்னை பூக்கடை சென்ன கேசவ மல்லீசுவரர் ஆலயத்தில் வருடந்தோறும் குடியரசு தினத்தன்று அடியார் திருக்கூட்ட இறைபணி மன்றத்தார் முழுநாள் திருப்புகழ் இசை விழா நடத்துகின்றனர். இவ்வாண்டும் வரும் 26-1-85 அன்று காலை 4.50 முதல் இரவு 12மணி வரை நடைபெறும் இவ்விழாவில் S.M.லோகநாதன், — கல்யாணசுந்தரம், சிதம்பரம்S.மீனாட்சிசுந்தரம், திருக்கடையூர் S.தண்டபாணி, திருவாவடுதுறை விசுவலிங்கம்-சபாபதி, M. M. வேங்கடவரதன், வாசுதேவன்-விசுவநாதன், திருமதிகள் பவானிஅம்மாள். து. சரசுவதி, ராதா கிருஷ்ணமூர்த்தி, புரசை E. அருணகிரி, சைதை நடராஜன்-பாலசுந்தரம், லால்குடி M. சுவாமிநாதன், குடந்தை லட்சுமணன்-தருமபுரம் ஞானபிரகாசம், திருமதி - திரு.பித்துகுளி முருக்தாசு ஆகியோர் கலந்து திருப்புகழ், தேவார பிரபந்த இசை வழங்குகின்றனர். விழா ஏற்பாடுகளைச் சிறப்பாக டாக்டர் PSC மணி, மன்றத் தலைவர் செய்துள்ளார்.

## தருமபுரம் சுவாமிநாதன் அரசவைக் கலைஞராவார்

பல்வேறு துறையில் உள்ள கலைஞர்களை அரசவைக் கலைஞர்களாக நியமித்துள்ள தமிழகஅரசு முதல்முறையாக திருமுறை இசைவாணர் ஒருவரை—தருமபுரம் பி.சுவாமிநாதன் அவர்களை அரசவைக் கலைஞராக குடியரசு தினத்தன்று நடைபெறும் இயல்இசை நாடக மன்ற 'கலைமாமணி' விருது வழங்கும் விழாவில் நியமிக்க உள்ளது. சென்ருண்டு தஞ்சாவூரில் நடைபெற்ற இராஜ இராஜ சோழன் 1000வது ஆண்டு முடிசூட்டு விழாவில் தமிழக முதல்வர் M.G.R. அறிவித்தபடி இந்தநியமனம் நடைபெற உள்ளது. இவர் மூன்ருண்டுகள் அரசவைக்கலைஞராக இருந்து மாதம் ரூ 1000 பெறுவார். இதுவரை 33கலைஞர்களை தமிழக அரசு அரசவைக் கலைஞராக்கி உள்ளது

மறைந்த இசைக்கலைஞர்

## T.K. ரங்காச்சாரி இசைச்சுட்டி வெளியீடு




சென்னை தியாகராயநகர் ஸ்ரீகிருஷ்ண கான சபையில் நடைபெற்ற இசைப்பருவ இசைவிழாவின் நடுவில் 28-12-84 அன்று காலை ஒரு சிறு விழாவும் நடைபெற்றது. இவ்விழாவினை மறைந்த இசைக் கலைஞர் T.K.ரங்காச்சாரி அவர்கள் மாணவர்கள் நடத்தினர். விழாவில் நீதிபதி K.S,வெங்கட்ராமன் தலைமையில் லால்குடி ஜெயராமன் T.K.ரங்காச்சாரி அவர்களின் படத்தைத் திறந்து வவத்து இசைக் கலைஞரைப் பாராட்டி பேசினர். எக்கோ காஸட்ஸ் நிறுவனம் ரங்காச்சாரி பாடல்களைத் தொகுத்து இசைச் சுட்டியாக (Cassette) அளித்தனர். அதனை டாக்டர் செம்மங்குடி சீனுவாச அய்யர் வெளியிட முதல் சுட்டியை ஸ்ரீகிருஷ்ணகானசபைச் செயலாளர் R. யக்ஞராமன் பெற்று நன்றி தெரிவித்தார்.

## ஈழ ஓதுவாரின் இனிய இசை விருந்து !



திருச்சிராப்பள்ளி திருநெறிய தமிழிசை மன்றத்தில் 25-11-84 அன்று திருமுறை இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது. இதில் யாழ்ப்பாணம் திருமுறை இசைவாணர் S. R. திருஞானசம்பந்தம், தனது தமிழக நண்பர் V. பாலசுப்பிரமணிய ஓதுவாருடன் தரமான-இனிமையான திருமுறை இன்னிசை விருந்தளித்தார். இவர் சமீபத்தில் ஈழத்திலிருந்து இந்தியா. வந்தவர்.பலமுறை மலேசியா சிங்கப்பூர் சென்று வந்தவர். நிகழ்ச்சிக்கு மன்றத்தலைவர் ப. மூக்கப்பிள்ளை தலைமை வகித்தார். செயலாளர்கள் S. நாகராஜன் S. முத்துக்கந்தசாமி ஏற்பாடுகளை செய்திருந்தனர்.

ஆஸ்திரேலியாவில்

## இந்தியக்கடல் கலைவிழா
### புல்லாங்குழல் ரமணி பங்கேற்பு

ஆஸ்திரேலியா நாட்டில் பெர்த் நகரில் இந்தியக்கடல் கலைவிழா 28-11-84 முதல் 9-12-84 வரை நடைபெற்றது. பல நாட்டு பிரமுகர்களும் கலைஞர்களும் இதில் கலந்து கொண்டனர். இதற்கு இந்திய நாட்டின் சார்பில் இந்திய கலைத்தொடர்பு கழகம் Indian Council for cultural Relations கலைஞர்களை அனுப்பியது. அதில் புல்லாங்குழல் கலைஞர் டாக்டர் N. ரமணியும், வயலின் S.D.ஸ்ரீதர், மிருதங்கம், திருவாரூர் பக்தவச்சலம், கடம் E.M.சுப்ரமணியம் ஆகியோர் சென்னையிலிருந்து சென்று பல நிகழ்ச்சிகளை நடத்தித் திரும்பினர்.

## பத்திரிகையாளர்களுக்கு பரிசுகள் !

## VGP அதிசய உலகில் அறிவிப்பு

சென்னை அருகே உருவாகிவரும் விஜிபி அதிசய உலகத்தில் ஜனவரி முதல் தேதி விஜிபி சகோதரர்கள் பத்திரிகையாளர் கூட்டத்தை நடத்தினர்கள். இவ்வுலகக்கொடியை பழம்பெரும் எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன் ஏற்றி வைத்தார். விழாவிற்கு அழ.வள்ளியப்பா தலைமை வகித்தார்.

வி.ஜி. பன்னீர்தாஸ் அனைவரையும் வரவேற்று பேசுகையில் அதிசய உலகம் அமைக்க தங்களுக்கு திட்டம் அமெரிக்காவில் உள்ள டிஸ்னி உலகத்தில் உருவானது எனவும் இவ்வுலகில் சகல கேளிக்கைகள், அறிவு வளரும் சாதனங்கள், கலைநிகழ்ச்சிகள்வைத்து உல்லாசப் பயணிகளைக் கவருவோம் என்ருர்.

வி.ஜி.சந்தோஷம் பேசுகையில் பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள், கவிஞர்கள்,ஓவியர்கள், புகைப்படக்கலைஞர்கள் ஆகிய 31 பேருக்கு தலா ரூ 1001/-ம் கேடயமும் பரிசு அளிக்கப்படும் என்று கூறி பரிசு பெறுவோரின் பெயர்களை அறிவித்தார்.

மற்றும் வானதி, அருணோதயம் ஆகிய இரு பதிப்பகங்களுககும் பரிசாக கேடயம் வழங்கப்படும் என்றும்; சிறந்த இலக்கியப் புத்தகத்திற்கும், சிறந்த தொழில் நுட்பப் புத்தகத்திற்கும் தலா ரூ5000 பரிசு வழங்கப்படும் என்றும் அறிவித்தார்.

இதற்காக நூல்ஆசிரியர்களும், பதிப்பகத்தாரும் 3 பிரதிகளை பிப்ரவரி 85 இறுதிக்குள் VGP கம்பெனிக்கு அனுப்பி வைத்தால் பரிசீலனை செய்து புத்தகங்கள் பரிசுக்கு தேர்ந்தெடுக்கப்படும் என்ருர்.

கூட்டம்முடிவில் வி,ஜி. செல்வராஜ் நன்றி கூறினர்.

TN/MS(S)/260
'IYALLSAI' Musical Bi-Monthly printed by T. Thitunavkarasu at Jayalakshmi Art printers II Vannier Street' Madras-94. and published / Edited by M. Lakshmi, 57, South Siyan Koil St Kodambakkam MADRAS-24

5 भारत INDIA

ந. ...மநாதன்,
18, ... சாலை
RA புரம்
சென்னை-28

## கடிதம்

,இயலிசை' ஆசிரியருக்கு,

வறுமையில் உள்ள முதுமையுற்ற தமிழ் அறிஞர்களுக்கு தமிழக அரசு ரூ 250/- மாத உதவிப்பணம் தருகின்றது. வறுமையில் வாடும் முதுமையான இசைக் கலைஞர்களுக்கு ரூ150/- மட்டுமே தருகின்றது. தற்போதுள்ள சூழ்நிலையில் இது போதாது. எனவே இப்புத்தாண்டிலிருந்து இசைக்கலைஞர்களுக்கும் ரூ250/-ஆக உயர்த்துவதுடன் அப்பணம் சங்கடமில்லாமல் சுலபமாக, அவர்கள் வாழ்நாள் முழுதும் தொடர்ந்து கிடைக்கும்படி தமிழக அரசு செய்ய வேண்டும் என்று 'இயலிசை' மூலம் தமிழக அரசை பணிந்து கேட்டுக் கொள்கின்றேன்.

கலையன்பன்

-ஊ. செயராமன்
சென்னை-1

## மதுரை பொன்னுசாமி பிள்ளை நினைவு விழா.

கடந்த நூற்றுண்டில் தோன்றிய நாதசுர இசை மேதை மதுரை M.K.M.பொன்னுசாமி 'பிள்ளை. இவர் பூர்வீக சங்கீத உண்மை' என்ற பெரும் இசை ஆராய்ச்சி நூலும் எழுதி புகழ் பெற்றவர். இவரது 105 வது ஆண்டு விழா மதுரையில் 17, 12. 84 அன்று சிறப்பாக நடைபெற்றது. பத்மஸ்ரீ K.J. ஜேசுதாசு குழுவினர் இன்னிசை வழங்கினார். விழா ஏற்பாடுகளை நாதசுரக் கலைஞர்கள் மதுரை M.P.N. சகோதரர்கள் செய்திருந்தனர் இவர்கள் பொன்னுசாமி பிள்ளையின் பேரன்கள் ஆவர்.

## தமிழகமெங்கும் தியாகராஜர் ஆராதனை இசை விழா

ஏராள இசைப்பாடல்களை (கீர்த்தனங்களை) கர்நாடக இசைக்கு அளித்த தியாக்ராஜ சுவாமிகளின் 138வது ஆராதனை உற்சவ இசைவிழா அவர் மறைந்த திருவையாற்றிலே ஜனவரி 8முதல் 12வரை சிறப்பாக் நடைபெற்றது.விழாவுக்கு தியாக பிரம்ம மகோத்சவ சபைத்தலைவர் ஜி. க்ருப்பையா மூப்பனார் MP தலைமை தாங்கினார் விழாவை மத்திய மந்திரி V.N. க்காட்கில் துவக்கி வைத்து பேசும்பொழுது வானொலியில் கர்நாடக இசைக்கு அதிக நேரம் ஒதுக்குவது பற்றி பரிசீலனை செய்து வருகின்றேன் என்றார்.

ஆண்டாள் கோவில் A.V. செல்வரத்னம் குழுவினா நாதசுர இசையுடன் விழா துவங்கியது. சபை செயலாளர் குன்னக்குடி வைத்யநாதன் வரவேற்புரை வழங்கினார். M. L. வஸந்தகுமாரி குழுவினர். வடஇந்திய இசைக் கலைஞர் உஸ்தாத் அம்ஜத் அலிகான் இசை நிகழ்ச்சியும் விழாவில் இடம் பெற்றன. சபையின் இன்னொரு செயலாளர் அரித்துவாரமங்கலம் பழநிவேல் நன்றி கூறினார்.

தமிழகமெங்கும் பல ஊர்களில் இசை விழாக்கள் நடந்தன. சென்னையில் 53 ஆண்டுகளாக நடைபெற்று வரும் ஸ்ரீ தியாக பிரம்ம பக்த சபையினர் ஜனவரி 9 முதல் 12 வரை ஜார்ஜ் டவுனில் இசை விழா நடத்தினர். கரூர் நாரத கான சபையினர் 12-1-95 அன்று முழுதும் ஆராதனை நடத்தினர். மாலை டாக்டர் S. இராமநாதன், 'தியாகராஜருடன் ஒரு நாள்' என்ற இசை நிகழ்ச்சியை நடத்தினார். சென்னை மயில் ஸ்ரீ தியாகராஜ சங்கீத வித்வத் சமாஜம் ஜனவரி 10 முதல் 19 வரை விழா நடத்தியது.

கோவூர் ஸ்ரீ தியாக பிரம்ம கான சபையினர் 13-11-84, 14-11-84 இரு நாட்களில் கோவூர் அருள்மிகு சுந்தரேசுவரர் ஆலயத்தில் தங்கள் 4ம் ஆண்டு விழாவினை நடத்தினர், கோவூரில் தியாகராஜசுவாமிகள் 5 கீர்த்தனங்களைப் பாடி அவை கோவூர் பஞ்சரத்னம் என போற்றப்படுகின்றது. மேற்கண்ட அனைத்து விழாக்களிலும் ஏராள பிரபல, இளம்இசைக் கலைஞர்கள் கலந்து பாடினர்.

## மணமக்களுக்கு வாழ்த்துக்கள்!

பிரபல தொழில் அதிபர்களும் இயலிசை ஆதரவாளர்களும் ஆன V.G.P. சகோதரர்களின் அண்ணுச்சி VG பன்னீர்தாஸ் அவர்களின் மகன் செல்வன் VGP ரவிதாஸ், B.Com, M.B.A. அவர்களுக்கும், தஞ்சாவூர் A Y S பரிசுத்த நாடார் அவர்களின் பேத்தி செல்வி J. ஜேனட் கேரொலின், B.A. அவர்களுக்கும் திருமணம் சென்னையில் 17.1.85 அன்று நடைபெறுகின்றது. மணவிழாவிற்கு நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் குழுவினர் நாதசுர இசை வழங்குகின்றனர். மாலை V G P கோல்டன் பீச் சந்தன மகாலில் நடைபெறும் வரவேற்பில் தீபன் சக்ரவர்த்தி குழுவினர் மெல்லிசை நிகழ்ச்சி உள்ளது.

தமிழக அரவை மிருதங்கக் கலைஞர் தஞ்சாவூர் உபேந்திரன் மகள் செல்வி குமுதவல்லிக்கும் மெய்வழி C K கோவிந்தராஜ முதலியார் மகன் செல்வன் கிஷன் குமார் B.Com அவர்களுக்கும் 27.1.85 அன்று சென்னை மயில் சாயி பாபா திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெறுகின்றது. திருமண விழாவிற்கு சிறுவன் மன்னார்குடி K. சங்கர நாராயணன் குழுவினர் நாசுர இசை வழங்குகின்றனர். காலை 11 மணி அளவில் தஞ்சாவூர் கமலா மூர்த்தி இசைச் சொற்பொழிவும் மாலை நடை[illegible]றும் வரவேற்பில் டாக்டர் M. பால முரளி கிருஷ்ணு இசை நிகழ்ச்சியும் ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது.

மறைந்த துணை அமைச்சர் R V சுவாமிநாதன் மகன் செல்வன் RVS கிஷோர் குமாருக்கும், எண்கண் நிலக்கிழார் E V ராஜரத்தினம் அவர்களின் மகள் செல்வ குமாரிக்கும் 23.1,85 அன்று சென்னை மயிலை இராஜ இராஜேசுவரி திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெற உள்ளது. மணவிழாவிற்கும் முதல்நாள் நடைபெறும் மாப்பிள்ளை அழைப்பிற்கும் மதுரை MPN சேதுராமன் M P N பொன்னுசாமி சகோதரர்கள் நாதசுரம் வாசிப்பர். இவர்களுக்கு தனித்தவில் கலைஞர்களான வலங்கைமான் A. சண்முக சுந்தரம், அரித்து வாரமங்கலம் A K பழனிவேல், திருவாளப் புத்தூர் T A கலியமூர்த்தி, தஞ்சை T R கோவிந்தராஜன் ஆகியோர் தவில் வாசிப்பர். திருமணத்தன்று மாலை நடைபெறும் வரவேற்பில் திரை இசை இயக்குநர் M S விசுவநாதன் குழுவினர் மெல்லிசை நிகழ்ச்சி.

நாதசுரக் கலைக்கு ஆதரவு தரும் நாகஸ்வராளி இசைச் சபை செயலாளர் N. சிவராம கிருஷ்ணன் (பாரத ஸ்டேட் வங்கி அலுவலர்) அவர்களுக்கும் செல்வி V. தேவ சேனு அவர்களுக்கும் 12.11.84 அன்று புதுக் கோட்டையில் திருமணம் நடைபெற்றது..

மணமக்களுக்கு இயலிசை வாழ்த்துக்கள்!

## கலைப் படைப்புகள்

தஞ்சை நால்வர் நாட்டிய இசைக் கருவூலம் (பொன்னையா மணி மாலை) பதிப்பாசிரியாகள் தஞ்சை கிட்டப்பா & சிவானந்தம் குருஸ்துதி. ஜதீஸ்வரம் [15] சப்தம் [18] சௌக்கவாணம் (27) தானவர்ணம் [2] ராக்மாலிகை [4] ஸ்வரஜதி (10) ஸ்வரபதம் [3] தில்லாணு [12] சுரதாள குறிப்புகளுடன் உள்ள புதிய இரண்டாவது பதிப்பு-
232 பக்கங்கள். விலை ரூ. 16

ஆடலிசை அமுதம் : இயற்றியவர் பத்மஸ்ரீ K. N. தண்டாயுத பாணி பிள்ளை, ஜதீஸ்வரம்-9, பதவர்ணம்-9, தில்லாணு-13 மற்றும் ஜதிக்கோர்வைகள்-9 சுரதாளக் குறிப்புடன் அடங்கியது.
196 பக்கங்கள். விலை ரூ. 35

ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் :
பதிப்பாசிரியர் V. வேணுகோபாலன்
சரஸ்வதி மகால், தஞ்சாவூர் வெளியீடு விலை ரூ.15
நந்திகேசுவரர் இயற்றிய அபிநயதர்ப்பணம்
மூலமும் உரையும், தமிழ் மொழி பெயர்ப்பு :
வீரராக வையன், 2வது பதிப்பு விலை ரூ.15
தமிழ்ப் பதங்கள் : டாக்டர் கௌரி குப்புசாமி &
டாக்டர் M. அலிகான் விலை ரூ.15
ஸ்ரீ தியாகராஜ சுவாமி கீர்த்தனைகள் : மொழி
பெயர்ப்பாசிரியர் : T.S. பார்த்தசாரதி தமிழில்
சுவாமிகளுடைய 675 திருதிகளின் மூலம், மொழி
பெயர்ப்பு, சுவாமிகள் வண்ணப்படம் மற்றும் சரித்திரம் அடங்கியது, 4வது பதிப்பு
586 பக்கங்கள் விலை ரூ.48

தகவல் : ஹிக்கன் பாதம்ஸ், சென்னை-2.